Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 33—No. 2



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே'

மலர் 33 | விகாரி மாசி 1960 பிப்ரவரி | இதழ் 2

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# மகிழ்ச்சிச் செய்திகள்



வாலாஜபாத்தில் 26-12-59-ல் அம்பலவாணர் வழிபாட்டுக் கூடத்தில் சமாஜ அன்பர்கள் கூடி சமாஜக் கட்டிடத்திற்கு நன்கொடையளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கிணங்க, சென்னை உருக்குமிணி குக்கர் உரிமையாளர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ. அவர்கள் ரூ. 20,000 (இருபதினாயிரம் ரூபா) கொடுப்பதாய் வாக்களித்தார்கள். அங்கிருந்தோர் அனைவரும் பார்மீது வீழ்ந்து வணங்கினர். அவரும் அப்படியே பணிந்து எல்லோருக்கும் திருநீறும் அளித்தார். அது மனத்தை உருக்கும்படியான காட்சியாக இருந்தது என்பதை நேரே கண்டவர்களே அறிவார்கள்.

காலஞ்சென்ற பெரியார் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களின் முதலாண்டுநினைவுநாள் விழாவை இராயப்பேட்டை சபையில் அறநிலயத்துறை ஆணையர் திரு. அ. உத்தண்டராமன், ஐ.ஏ.எஸ். அவர்கள் தலைமையில் கொண்டாடியபோது, ம. பா. அவர்களின் மருகர் மயிலை. திரு. சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்கள் சமாஜக் கட்டிடத்திற்கென ரூ. 6000 (ஆறுயிரம் ரூபா) நன்கொடை வழங்குவதாக வாக்களித்தார்கள். இன்னும், அண்மையில் வாலாஜாபாத்தில் நடைபெற்ற சமாஜச் சொற்பொழிவுகளை ம. பா. அவர்களின் நினைவாக நூல்வடிவில் வெளியிடவும், நிலைத்த நிதியாக ரூ. 2000 (இரண்டாயிரம் ரூபா) அவர்களே நன்கொடையளித்துள்ளார்கள்.

இவ்விரண்டு பெரியார்களின் பெருந்தன்மைக்குச் சைவத் தமிழுலகம் என்றும் கடப்பாடுடையது. சமாஜத்தின் நீண்டநாள் எண்ணம் நிறைவேறியதற்குச் சமாஜம் அன்னார்களுக்கு நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவிக்கிறது—சமாஜச் செயலர்கள்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானியையுள் நாடு

மலர் 33 | விகாரி மாசி 1960 பிப்ரவரி | இதழ் 2

## குமரகுருபரர்*

(முருகவேள்)

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கத் தொண்டாற்றியருளிய அண்மைக் காலச் சான்றோர் பெருமக்களுள், குமரகுருபர அடிகள் குறிப்பிடத்தக்க மிக்க பெருஞ்சிறப்புடையராவர். 'பொறி புலன்களை அடக்கி ஒரு நெறிய மனம் வைத்து உணரவல்ல பெருந்தவ முனிவர்களே அழியாத பேரிலக்கியங்களை இயற்றுந்திறம்பெற்றவர்கள் ஆவர்' (It is only great seers who can produce great literature) என்பது ஒரு பேருண்மையாகும். தொல்காப்பியர் திருவள்ளுவர் இளங்கோவடிகள் திருமூலர் திருத்தக்கதேவர் பட்டினத்தார் அருணகிரியார் தாயுமானர் இராமலிங்கர் முதலிய எண்ணற்ற தமிழ்ப்பெருஞ் சான்றோர்களின் நூல்களும் வாழ்க்கையும் இவ் வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தும். திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும், எங்ஙனம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்ப் "பொருட்சமய முதற்சைவ நெறி தான் பெற்ற புண்ணியக்கண் இரண்டு" என விளங்கினரோ, அங்ஙனமே ஏறத்தாழ இருநூறு

---

*குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் 12-ஆம் ஆண்டு நிறைவில், சித்தாந்த சரபம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் தலைமையில், குமரகுருபரர் விழாவிற் பேசியதன் சுருக்கம். (3-1-60)

மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்ச் சிவநெறிக்கும் செந்தமிழ் மொழிக்கும் இருபெருங் கண்கள்போல விளங்கியிருந்து, அரும்பெருந் தொண்டுகள் புரிந்தவர்கள் சிவஞான சுவாமிகளும் குமரகுருபர சுவாமிகளும் ஆவர் எனலாம். பிற்காலப் புலவர் பெருமக்களுள் தமது நுண்மாண் நுழைபுலனுலும், பல கலைத்துறைப் பேரறிவினுலும், தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாராய் வீறுற்றுத் திகழ்ந்திருந்த சிவஞான சுவாமிகள் தாமும், குமரகுருபர சுவாமிகள்பாற் பெருமதிப் புடையராய் மிகவும் ஈடுபாடுகொண்டு விளங்கினர் என்பது, சிவஞான சுவாமிகளால் இயற்றப்பெற்ற 'சித்தாந்த மரபு கண்டன கண்டனம்' என்னும் நூலில்,

"'பாலுண்குழவி பசுங்குடர் பொருதென—நோயுண்மருந்து
தாயுண்டாங்கு' எனத் தருமபுரத்தில் வழங்கி வரும்
அகவலின் பொருளும் அறியிர் போலும்!"

எனவரும் பகுதியில், குமரகுருபரர் இயற்றியருளிய 'சிதம்பர மும்மணிக்கோவை' வரிகளை எடுத்தாண்டிருக்கும் திறம்பற்றி உணர்ந்து கொள்ளப்படும்.

குமரகுருபரர் பொறிபுலன்களை அடக்கி ஒரு நெறிய மனம் வைத்துணர வல்ல தவமுனிவர் மட்டும் அல்லர்; மிகச் சிறந்த பெருங்கவிஞரும் ஆவர். 'மக்கள் மனம் மகிழத் தக்க அரியபெரிய கருத்துக்களை எளிய இனிய முறையில் தெளிவுறப் பாடுந் திறன் மிக்கவர்களே கவியரசர்கள் எனக் கருதப்படுதல் வேண்டும்' (They shall be accounted poet - kings, Who simply tell the most heart-easing things) என ஜான் கீட்ஸ் (John Keats) என்னும் ஆங்கிலப் புலவர் கூறிப்போந்தார். அக் கருத்தை ஒட்டிப் பார்ப்பின், நமது குமரகுருபர அடிகளார் ஒரு மாபெருங் கவியரசர் என்பதில் சிறிதும் தடையில்லை.

" கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு"

எனவரும் நீதிநெறிவிளக்கப் பாடலில், 'உலகைப் படைக்

கும் பிரமதேவன் தானும் கவிஞர்களுக்குப் படைப்பாற்ற லில் ஈடாகமாட்டான்' எனக் கவிஞர்களின் பெருமை குறித்துக் குமரகுருபரர் கட்டுரைத் திருத்தல் காணலாம்.

இங்ஙனம், மிகச் சிறந்த பெருங்கவிஞரேருகப் பிறங்கி யருளிய நம் அருமைக் குமரகுருபர அடிகளார், எளிய இனிய கவிதைகளால் அரிய பெரிய சைவ சித்தாந்தத் தத்துவக் கருத்துக்களை விளக்குதலில் வல்லமை மிக்கவராகத் திகழ்கின்றார். 'மிக ஆழ்ந்த மெய்யுணர்வுக் கருத்தினன் அல்லாத எவனும் ஒரு பெருங் கவிஞனாக இதுகாறும் விளங் கியதில்லை' ("No man was ever yet a great poet without being at the same time a profound philosopher" - S. T. Coleridge) என்பது உண்மையே யன்றோ? குமரகுருபரர் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றையும் ஆங்காங்கே தமது பாடல்களிற் சுவைமிக விளக்கியருள்தலை ஈண்டுச் சிறிது காணலாம்:

"உயிர்கள் எல்லாம் உய்தற்பொருட்டுச் சுத்தமாயை என்னும் பெரிய வயலில், அருள் ஆகிய விதையை விதைத்து இரக்கம் ஆகிய நீரைப் பாய்ச்சி, வேதம் என்னும் மரத்தினை இறைவன் வளர்த்தான். அம் மரத்தினால் உண்டான பயன் களோ பல. அவற்றுள் சிலர் இலைகளைப் பறித்து உவந்தனர். சிலர் தளிர்களைப் பறித்து மகிழ்ந்தனர். மற்றுஞ் சிலர் அரும்பு மலர் பிஞ்சு காய் என்பனவற்றில் தத்தம் பக்குவத் தகுதிகட்கு ஏற்பன கொண்டு இனிதமைந்தனர். இந்நிலையில் அவ் வேதமாகிய மரத்தின், வேதாந்தம் என்னும் உச்சியிற் பழுத்த ஆரா இன்ப அருங்கனியைப் பிழிந்து, அதன் சார மாகக் கொண்ட சைவ சித்தாந்தம் என்னும் தேனமிழ்தத் தினையுண்ணும் பெறலரும் பேற்றினை எய்தினோர் இவ்வுலகில் மிக மிகச் சிலரேயாவர்" என்னும் கருத்தமைய,

"ஒரும்வே தாந்தம்என் றுச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்ததன்
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே"

எனவரும் அழகிய இனிய வரிகளால், பண்டார மும்மணிக்

கோவையின்கண் சைவ சித்தாந்தத்தின் தனிப் பெருஞ் சிறப்பினை, அடிகளார் விளக்கியிருத்தல் அறிந்தின் புறற்பாலது. "மலரினும் மெல்லிது காமம். சிலர் அதன் செவ்வி தலைப்படுவார்" எனக் காம இன்பச் செவ்வியைத் தலைப்படுவோர்தாமே, மிக மிகச்சிலர் எனத் திருவள்ளுவர் கூறுவாராயின், சைவசித்தாந்தத்தேனமுது அருந்தினர்சிலரே எனக் குமரகுருபரர் கூறுதலில் வியப்பேதும் உண்டோ?

"மாசிலா மணிஎன வண்பெயர் நிறீஇ
மேன்மையோ டமர்ந்த ஞானசம் பந்த!
ஈண்டுனைத் தமியேன் வேண்டுவது யாதெனின்,
அந்நியம் என்றும் அநந்நியம் என்றும்
இந்நிலை இரண்டும் எய்திற்று என்றும்
பல்வேறு உரைக்குநர் சொல்வழிப் படாஅது,
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்து
இறவா நிலைமைபெற் றின்பம்ஆர்ந் திருக்கும்
பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே"

எனப் மீண்டும் குமரகுருபரர் பெருமான், சைவ சித்தாந்தத்தின் தன்னிகரற்ற பெருஞ்சிறப்பினைக் குறிப்பிட்டருளி யிருத்தல் உணர்ந்தின்புறற்பாலது.

சைவ சித்தாந்த உண்மைகளை உலகியலில் வைத்தும், உருவக அணிபுணர்த்தும், குமரகுருபரர் தமது பாடல்களில் ஆங்காங்கே சொற்பொருட் சுவை நலங்கள் துளும்ப நம்மனோர்க்கு நன்கினிது உணர்த்தியருள்கின்றார்: 'உயிர் ஞானத்தைப் புணர்ந்து வீடு பெறுதற்குரியது. ஆனால், அது பண்டே ஆணவமலத் தொடர்புகொண்டு ஞானத்தைப் புணராது புறக்கணித்து, அஞ்ஞான வயப்பட்டு மயங்கிக் கிடக்கின்றது. ஆணவமலத் தொடர்பால் உயிர்க்கு மாயையின் தொடர்பு நிகழ்கின்றது. அது சுத்தமாயை அசுத்தமாயை என்று இருதிறப்படும். சுத்த மாயையினின்று சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் சிவதத்துவங்கள் ஐந்தும் தோன்றும். அசுத்தமாயையினின்று காலம் நியதி கலை என்பன தோன்றும். கலையானது வித்தை அராகம் மூலப்பிரகிருதி என்பனவற்றைத் தோற்றுவிக்கும். மூலப் பகுதியினின்று ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம்

ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக்கரணம் நான்கு ஆக, இருபத்துநான்கு ஆன்ம தத்துவங்கள் தோன்றும். இவற்றோடெல்லாம் இயைந்து உயிரானது தனுகரண புவன போகங்களைப்பெற்று உலகியலில் மயங்கியுழன்றுவரும். இதனை,

" ஈதொன்று இயம்புவல் கேண்மதி பெரும !
அலையா மரபின் ஆணவக் கொடிஎனும்
பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ,
ஏகலன் தணந்தாங்கு என்னையும் உணராது
மோகமோ டழுந்தி முயங்குறும் அமையத்து
அங்கவட் குரிய தங்கையர் இருவருள்,
குடிலை என்னும் மடவரல் ஒருத்தி
எய்தரும் புதல்வியர் ஐவரைப் பெற்றனள்.
மோகினி என்பவள் மூவரைப் பயந்தனள்.
ஆகிய புதல்வியர் அங்கவர் மூவருள்
கலைஎனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானும் மூவரைத் தந்தனள்! அவருள்
மான்எனப் பட்ட மடவரல் ஒருத்தி
எண்மூன்று திறத்தரை ஈன்றனள்! இத்திறம்
நண்ணிய மடந்தையர் ஐயெழு வரையும்
கிளப்பருங் காமக் கிழத்தியர் ஆக
அளப்பில் காலம் அணைந்தனன் ......"

எனக் குமரகுருபரர் கூறியிருக்குந் திறம் பெருவகை விளைப்பதாகும். இவ்வுருவகத்தின்கண், உயிரானது ஞானத்தைப் புணர்ந்து வீடுபேறு எய்தக்கடவதாகலின், உயிர் தலைவனாக வும், ஞானம் தலைவியாகவும் கொள்ளப்பெற்றன. உயிர் ஞானத்தைப் புணர்வதனைத் தடை செய்தலானும், 'பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டு என்றும் கணவற்கும் தோன்றாத கற்பு' எனத் திருவருட்பயன் கூறுதற்கேற்ப உயிர்கள் பலவற்றையும் தானொன்றேயாய்ப் புணர்ந்து நிற்றலானும், ஆணவமலம் சேரிப்பரத்தையாக இழித்துரைக் கப்பட்டது. ஆணவமலம் காரணமாக மோகம் மதம் அராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என்பன நிகழ் தலின் "மோகமொடு அழுந்தி" என்றும்; ஆணவமலத் தொடர்பால் உயிர்க்குச் சுத்தமாயை அசுத்தமாயைகளின்

தொடர்பு வாய்த்தலின் அவற்றை அதற்குத் "தங்கையர் இருவர்" என்றும்; உயிர்க்குப் போகநுகர்ச்சியின் பொருட்டு மலசத்தியிற் சிறிதே நீக்கிச் செயலாற்றலை விளக்குவது கலையாகலின் அதனைக் "கணிகை" என்றும்; சிவதத்துவம் ஐந்து வித்தியாதத்தும் ஆறு ஆன்மதத்துவம் இருபத்து நான்கு ஆகிய முப்பத்தைந்தனேடும், உயிரானது இயைந்து நின்று போகம் நுகர்ந்து வருதலின் அவற்றைக் "காமக்கிழத்தியர்" என்றும் பிறவாறும் அடிகளார், விரிவாக உருவகம் செய்திருக்கும் அருமைப்பாடு அறிஞராயினர் அனைவரும் பெரிதும் போற்றுதற்குரியது.

இவ்வாறே, இறைவன் இயல்பிற்கும் உயிரின் இயல்பிற்கும் இடையே உள்ள ஒப்புமைகளைச் சுட்டிக்காட்டி, மாசிலாமணி ஞானசம்பந்த தேசிக கோலம் தாங்கிப் போந்துள்ள இறைவனைத் தம்பாற் சம்பந்தம் செய்துகொள்ளும் படி,

"ஒன்றே தன்மை உமக்கும்மற் றெமக்கும்!
அன்றென மொழியினும், ஆம்எனப் படுமே!
அங்ஙனம் கூறியது எங்ஙனம்? பிறஎனின்,
எஞ்ஞான் றுளை,உளம் அஞ்ஞான்று யாமே!
அழியா நிலைமையை அனையம் யாமே!
வியாபகம் நினக்குளது, யாமும்அஃ துளமே;
அறிவெனப் பெயரிய பெயரினை, அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே!
இச்சா ஞானக் கிரியைஎன் றிசைக்கும்
சத்திகள் உளை,உளது அத்திறம் எமக்கே!
இந்நிலை முழுவதும் எமக்கும்உண் டாகலின்,
அந்நியம் அலம்நினக்கு அநந்நியம் யாமே!...
சம்பந் தப்பெயர் தரித்தமை யால்எமைச்
சம்பந் தம்செயத் தகும்தகும் நினக்கே!"

எனக் குமரகுருபரர் சுவை மிக வேண்டுகின்றார். நீர் 'புருடர்' ஆதலின் நம்மோடு சம்பந்தங் கொள்ளுதல் இயலாது என இறைவன் மறுத்து விடாமைப் பொருட்டு, உயிர் 'புருடன்' எனப் பெயர் பெறுதற்குரிய காரணம் இனைத்தென்றும், 'புருடன்' எனப் பெயர் பெறினும் உயிர் தன்னியல்பிற் பெண்டன்மைத்தே என்றும், அவ்வுண்மைக்குச் சான்று

" அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே " என்றபடி 'புருடோத்தமன்' எனப் பெயரிய திருமாலை நீர் நமக்குரிய சத்தியாக ஏற்றுக்கொண் டிருப்பதேயாம் என்றும் கூறி வற்புறுத்துகின்றார் :

" கருவிகட்கு இறைமை காட்டுபு நிற்றலின்
புருட நாமம் புனைந்தனம், ஆயினும்
அத்தநிற் குறிப்பிற் சத்திகள் யாமே !
புருடனைச் சத்தியிற் புணர்த்தனை ! அன்னதற்கு
ஒருகாட்டு என்ப புருடோத் தமனே !"

குமரகுருபரரின் இத்தகைய சொற்பொருட் சுவை நலங்கள் மிக்க பாடல்கள் அத்தனையும் ஈண்டு முற்ற எடுத்து மொழிந்து விளக்கப்புகுதல் இயல்வதொன்றன்று. ஆதலின் ஒரு சில சுவை மிக்க பாடல்களையும் வரிகளையும் மட்டில் ஈண்டுக் குறிப்பிட்டு அமைதல் சாலும் :

" திரிகர ணங்கள்என் றுரைசெயும் அப்பெயர்
ஒருபொருட் கிளவி எல்லோர்க்கும்
இருபொருட் கிளவியாய் இருந்ததின் றெனக்கே "

" எற்கமலஞ் செய்யும் எழில்மாசி லாமணிதாள்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
ஊரிற் குறுகினேன் ஓர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின்."

" சத்திநி பாதம்நின் சந்நிதிப் பட்ட
இத்திறத் தெளிதினில் எய்தியது எனக்கே "

" தன்னேர் இலாஞான சம்பந்தன் தாள்அடைந்தார்க்
கென்னே இருள்வெளியாம் என்பரால்-அன்னோன்
அருளாத போதுவெளி யாய்இருந்த எல்லாம்
இருளாய் இருந்த எனக்கு "

" பொன்னேயல் லாமற் பொருளோ டுடலுயிர்விற்
றென்னே மணியொன் றெவர்கொள்வார்?—கொன்னே
குருமாசி லாமணியைக் கொள்வோர்கொள் ளாமுன்
தருவார்மற் றிம்மூன்றும் தான்."

" கூடும் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென
நாடும் அவிநயத்தை நண்ணிற்றால் - ஓடியகட்
காதனார் காணஒரு கால்காட்டிக் கையமைத்து
நாதனார் செய்யும் நடம்"

——

# மூவர் தேவாரம்

(" சைவநெறிக்காவலர் "-டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனுர் அவர்கள், M.A., L.T., M.O.L., PH.D.)

முன்னுரை:—மூவர் என்பவர் திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சுந்தரர் என்று பெயர் பெற்ற சைவ சமய குரவராவர். தேவாரம் என்பது அவர்கள் பாடிய தோத்திரப் பாக்களின் தொகுதியாகும்.

இம் மூவருள் திருநாவுக்கரசரும் சம்பந்தரும் கி. பி. 7-ஆம் நூற்ருண்டினர்—ஒரே காலத்தினர். சுந்தரர் கி. பி. 9-ஆம் நூற்ருண்டினர்; காடவர்கோன் கழற்சிங்கனை மூன்ரும் நந்திவர்மன் காலத்தவர் (கி. பி. 825—850).

சம்பந்தர்க்கு முன்னரே திருநாவுக்கரசர் சைவராகப் பிறந்தவர்; சமண சமயத்தில் பல ஆண்டுகள் இருந்தவர்; மீண்டும் சைவராக மாறிச் சைவத்தை வளர்த்தவர். இங்ஙனம் இவர் கோயிற் பயணம்செய்து சைவத்தை வளர்த்து வரும்போதுதான் சிறு பிள்ளையான சம்பந்தர் இவரைச் சந்தித்தார்; இவரது முதுமையை நோக்கியும், சைவம் பரப்புவதில் தமக்கு வழிகாட்டியாக இருத்தலை நோக்கியும் இப் பெரியவரை "அப்பரே" (Father) என்று அழைத்தார். கிறித்தவப் பாதிரிகளை நாம் இன்று "அப்பரே" (Father) என்று அழைக்கிரேம் அல்லவா? இதே முறைபற்றியே சிறுவராகிய சம்பந்தர் பெரியவராகிய திருநாவுக்கரசரை "அப்பரே" என்று அழைத்தார்.

அப்பர் 81 வயது வாழ்ந்தவர்; சம்பந்தர் 16 வயது வாழ்ந்தவர். சம்பந்தர் பிறப்பதற்கு முன்பே அப்பர் திருப்பதிகங்கள் பாடினார். இவை அனைத்தையும் நோக்கும்போது, திருமுறை வரிசையில் முதல் இடம் பெறத்தக்கவர் திருநாவுக்கரசரே ஆவர்.

திருநாவுக்கரசர் இமயமலை வரையில் கோயிற்பயணம் செய்தவர். அவரும் சுந்தரரும் நடந்தே கோயிற்பயணம் செய்தனர். திருஞான சம்பந்தர் பல்லக்கில் பயணம்

செய்தார். நடந்து யாத்திரை சென்றமையாலும் முதுமையாலும் திருநாவுக்கரசர் ஏறத்தாழ (இன்றுள்ள திருப்பதிகங்களின் கணக்குப்படி) 126 தலங்களை வழிபட்டார்; சுந்தரர் 84 தலங்களை வழிபட்டார்; பல்லக்கில் சென்ற சம்பந்தர் ஏறத்தாழ 220 தலங்களை வழிபட்டார்.

இம்மூவரும் பாடிய திருப்பதிகங்கள் கி. பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராசராச சோழன் விருப்பப்படி நம்பியாண்டார் நம்பியால் ஏழு திருமுறைகளாக முறைப்படுத்தப்பட்டன. இவற்றின் சிறப்பை உணர்ந்து பிற்காலத்தில் இவை பாதுகாக்கப்பட்டன. ஒவ்வொரு தலத்திலும் அத்தலத்திற்குரிய பதிகம் பிற்காலத்தில் மக்களால் பாடப்பட்டது. திருமுறை ஏடுகள் பாதுகாக்கப்பட்டன; கெட்டவை புதுப்பிக்கப்பட்டன. சோழப் பேரரசரும் பிறரும் இவற்றை ஓதுவார்க்கு மானியங்கள் விட்டனர். இப் பாக்களின் அருமை பெருமைகளை நோக்கி, இவை பாடப்பெற்ற கோவில்கள் சோழப் பேரரசர் காலத்திலே பெரிதும் சிறப்பிக்கப்பட்டன.

**திருமுறைகளின் சிறப்பு:**—தமிழகம் கி. பி. 300 முதல் 900 வரை பல்லவர் என்ற புதிய மரபினர் ஆட்சியில் இருந்தது. பல்லவர் அயலவர்; வடமொழியை ஆதரித்தவர்; பௌத்த—சமண சமயங்களை ஆதரித்தவர். அப்பருக்குப் பிறகே சைவத்தைப் பெரிதும் ஆதரிக்கத் தொடங்கினர். அவர்கள் காலத்தில் இத் திருமுறைகள் தவிர வேறு சிறந்த இலக்கிய நூல்கள் தோன்றவில்லை. எனவே, முதல் எட்டுத் திருமுறைகளையும் ஆழ்வார்கள் பாடிய நாலாயிரப் பாசுரங்களையும் பல்லவர் கால இலக்கியம் என்று சொல்லலாம். எனவே, பல்லவர் காலத் தமிழகத்தையும் ஊர்களையும் பிறவற்றையும் அறிய இப் பாடல்களே நமக்கு உறுதுணையாக இருக்கின்றன. சங்க காலத்தை அடுத்தது பல்லவர் காலம். ஆயினும் சங்க காலத்தில் இல்லாத தாண்டகம், விருத்தம் முதலிய புதிய செய்யுள் முறைகள் திருமுறைகளில் இடம் பெற்றுள்ளன. இதனால் பல்லவர்காலத்தில் (கி. பி. 300-900) வடமொழியின் செல்வாக்குத் தமிழகத்தில் மிகுதிப்பட்டு

விட்டது என்பது தெளிவாகிறது. வடமொழியாளர் பல இடங்களில் குடியேறிப் புதிய ஊர்களை அமைத்துக்கொண்டிருந்தனர் என்பதும் தெரிகிறது.

இத் திருமுறைகளால் (1) சங்க நூல்களைக் கொண்டு அறியமுடியாத தமிழ்ப் பண்கள், (2) தமிழ்மொழி வளர்ச்சி, (3) தமிழ் நாட்டின் ஐந்திணை அமைப்பு, (4) தமிழ் நாட்டுத் தலங்கள், (5) சைவ—பௌத்த சமணப் போராட்டங்கள், (6) சிவநெறியும் வைதிகமும் ஒன்றுபட்ட நிலை, (7) இசை-நடனம்-கட்டடம் முதலிய கலைகள், (8) அக்காலச் சிற்றூர்கள், பேரூர்கள்பற்றிய விவரங்கள், (9) தமிழருடைய உடை-உணவு-நடை-கல்வி-பழக்க வழக்கங்கள், (10) கி. பி. 300 முதல் 900 வரை இருந்த தமிழக அரசியல், (11) சமய குரவர் மூவரும் பரப்பிய சிவநெறிபற்றிய செய்திகள் ஆகியவற்றை அறியலாம்.

**வைப்புத் தலங்கள்** :—சமய குரவர் மூவரும் நேரிற் சென்று வழிபட்ட கோவில்கள் பாடல்பெற்ற கோவில்கள் எனப்படும். அவர்கள் பல கோவில்களைப் பாராமல், ஆனால் அவற்றின் பெயர்களை மட்டும் தம் பாடல்களில் குறித்துள்ளனர். இங்ஙனம் குறிக்கப்பட்ட தலங்கள் வைப்புத் தலங்கள் எனப்படும். இங்ஙனம் மூவராலும் குறிக்கப்பட்ட வைப்புத் தலங்கள் பலவாகும்.

**வரலாற்றுச் செய்திகள்** :—(1) காஞ்சியில் மதில் இருந்தது என்று அப்பர் குறித்துள்ளார். காஞ்சியில் இருந்த பல்லவர் காலத்து மதில் ஏற முடியாதது என்று சாளுக்கியர் பட்டயம் குறிக்கின்றது.

(2) “ கல்வியில் கரையிலாத காஞ்சிமா நகர் ” என்பது அப்பர் தேவாரம். அவர் காலத்தில் காஞ்சியில் இந்தியப் புகழ்பெற்ற பெரிய கடிகை (வடமொழிக் கல்லூரி) ஒன்று இருந்தது. அதில் கல்விகற்ற பெருமக்கள் நலந்தாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்களாக இருந்தனர் என்பது வரலாறு கூறும் செய்தியாகும்.

(3) நாகையில் கப்பல்கள் இருந்தமையைச் சம்பந்தர் குறிக்கின்றார். பல்லவர் காலத்தில் நாகப்பட்டினம் சிறந்த துறைமுக நகரமாக இருந்தது என்பது சீனர் எழுதிவைத்த குறிப்புக்களால் தெரிகிறது.

(4) "வாசி தீரவே காசு நல்குவீர்" என்பது சம்பந்தர் தேவாரம். அப்பர்க்குக் கிடைத்த காசு குற்ற மற்றது. போர்க்காலத்தில் மாற்றுக் குறைந்த நாணயங்கள் வெளியிடப்படுவது வழக்கம். அதை மாற்றும்போது மிகுதி யாக வட்டம் கழிக்கப்படும். பல்லவ நாட்டில் ஓயாத போர் கள் நடைபெற்றன. அக்காலங்களில் வெளியிடப்பட்ட நாணயங்கள் மாற்றுக் குறைந்தவை.

(5) "உரிமையால் பல்லவர்க்குத் திறைகொடா மன்ன வரை மறுக்கம் செய்யும்" என்பது சுந்தரர் தேவாரம். இக் குறிப்புத் தமிழரசர்க்கும் மூன்றும் நந்திவர்மனுக்கும் நடை பெற்ற போரைக் குறிப்பதாகும்.

(6) "கந்தம் முதல் ஆடையாபரணம் பண்டாரத்தே எனக்குப் பணித்தருள வேண்டும் பண்டுதான் பிரமாண மொன்றுண்டே."என்பது சுந்தரர் தேவாரம். அவர் குறித்த 'பண்டாரம்' என்பது கல்வெட்டுக்களில் ஸ்ரீ பண்டாரம் எனப்பட்டது. கோவிலில் பொக்கிஷ சாலை இருந்தது என் பதை இது குறிக்கிறது. இதனால் பல்லவர் காலக் கோவில் களில் கோவில் ஆட்சிமுறை இருந்தது என்பதை ஊகிக்க லாம். பல்லவர் கல்வெட்டுக்கள் இதனை மெய்ப்பிக்கின்றன. இத்தகைய வரலாற்றுச் செய்திகள் பல இத் திருமுறைகளில் இருக்கின்றன.

**புறச்சமயச் செய்திகள்** :—அப்பர் சம்பந்தர் பாடல்களில் பௌத்தர்—சமணர் பற்றிய குறிப்புக்கள் இருக்கின்றன. சம்பந்தர் பாடல்களில் அவை மிகுதியாக இருக்கின்றன. அக்காலப் பௌத்தர்—சமணர் நடைமுறைகளையும், சமயக் கொள்கைகளையும் அறிய இவ்விருவர் கூற்றுக்களும் பெருந் துணை செய்கின்றன. "சமணர் வேத வேள்வியை நிந்தித் தனர்—சிவனை அவமதித்துப் பேசினர்—எரியோம்பலை அவ

மதித்தனர்—வைதிகத்தின் வழி ஒழுகாதவர்—தடுக்கால், உடல் மறைத்தவர்—பொல்லா மனத்தவர்—தலை பறித்தவர்—நீதியறியாதவர்—கையில்வைத்து நின்று உணவு உண்பவர்—வீங்கிய உடலினர்—விருது பகரும் வெஞ்சொல் சமணர்—நீராடாதவர் " என்று சம்பந்தர் பல இடங்களில் சமணரைப் பற்றிக் கூறியுள்ளார். அவர் ஒவ்வொரு பதிகத்திலும் பத்தாம் பாடலில் பௌத்தரையும் சமணரையும் குறித்துப் பாடியுள்ளார்.

**நாயன்மார்பற்றிய செய்திகள் :**—அப்பூதி அடிகள் முதலிய பத்து அடியார்களை அப்பர் தம் பாக்களில் குறித்துள்ளார். சிறுத்தொண்டர் முதலிய பதின்மூன்று நாயன்மார்களைச் சம்பந்தர் குறிக்கின்றார். கோட்புலியார் முதலிய பதினைந்து அடியார்களைச் சுந்தரர் குறிப்பிட்டுள்ளார்; திருத்தொண்டத் தொகையில் 63 நாயன்மார்களையும் குறித்துள்ளார்.

**புதிய செய்யுட்களும் பண்களும் :**—சங்ககாலத்திற்குப் பிறகு வடமொழியாளர் கூட்டுறவால் புதிய செய்யுட்கள் தமிழில் தோற்றம் எடுத்தன. அந்தாதி, விருத்தம், தாண்டகம், யமகம், சக்கரமாற்று, கோமூத்திரி என்பன அவற்றுட் சில. இவை திருமுறைகளில் இடம்பெற்றுள்ளன. இவ்வாறே வடமொழிப் பண்கள் சிலவும் இடம்பெற்றுள்ளன. அவை கௌசிகம், சாதாரி, பஞ்சமம், காந்தார பஞ்சமம் முதலியன. இவற்றால், தமிழ் மொழியில் பல்லவர் காலத்திய செய்யுள் துறையில் உண்டான மாற்றங்களை நாம் நன்கு அறியலாம்.

**கோவில் வகை :**—பாடல்பெற்ற கோவில்கள் ஈசுவரம், பெருங்கோவில், ஆலக்கோவில், கரக்கோவில், ஞாழற்கோவில், கொகுடிக்கோவில், இளங்கோவில், மணிக்கோவில், தூங்கானை மாடம் எனப் பலவாகப் பெயர்களைப் பெற்றிருந்தன என்பது மூவர் திருப்பதிகங்களிலிருந்து தெரிகிறது.

(1) பெருங்கோவில் என்பது மாடக்கோவில் எனப் பெயர்பெறும். அது செய்குன்றின்மேல் கட்டப்பட்டது.

அப்பர் காலத்தில் 78 பெருங் கோவில்கள் இருந்தன. பெருங் கோவில்கள் கோச்செங்கணன் எடுப்பித்தவை. இதனைத் திருமங்கையாழ்வார் வாக்கால் உணரலாம். (2) ஞாழற்கோவில் என்பது ஞாழல்மரம் இருக்கப்பெற்ற கோவில் ஆகும். திருப்பாதிரிப்புலியூர்க் கோவில் ஞாழற் கோவில் எனப் பெயர் பெற்றிருந்தது. (3) கொகுடிக் கோவில் என்பது கொகுடி என்னும் ஒருவகை முல்லை நிறைந்த இடத்தில் அமைந்த கோவில் எனப் பொருள்படும். திருக்கருப்பறியலூரில் உள்ள கோவில் இப்பெயரை உடையது. (4) ஆலக்கோவில் என்பது ஆலமரத்தைத் தலமாகப் பெற்ற கோவில் என்று கூறலாம். அது திருக்கச்சூரில் (செங்கற்பட்டுக் கருகில்) உள்ளது. (5) இளங்கோவில் என்பது பழையகோவிலைப் புதுப்பிக்குங்கால் அதற்கு அண்மையில் இறைவனை எழுந்தருளுவித்து வழிபாடு புரிந்த கோவில் இளங்கோவில் எனப்பட்டது. திருமீயச்சூர்க் கோவில் இப்பெயர் பெற்றது. சேய்மையில் உள்ளவர் தாம் வழிபடும் கடவுளைத் தம்மூர்க்கு அணித்தாக எழுந்தருளுவித்து எடுப்பித்த கோவிலும் இளங்கோவில் எனப்படும். (6) கரக்கோவில் என்பது தேர் வடிவமாகச் சக்கரங்களோடு அமைக்கப்பெற்ற கோவிலாகும். கடம்பூர்க்கோவில் இப் பெயர்பெற்றது. (7) மணிக்கோவில் என்பது மணிகள் பரப்பினாற்போன்ற மேற்கூரை அமைப்புடைய விமானம் கொண்ட கோவிலாகலாம் என்று அறிஞர் சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் கருதுகிறார்கள். உண்மை தெரியவில்லை. (8) தூங்கானைமாடம் என்பது வராஹமிஹிரர் குறித்துள்ள பலவகை விமானங்களில் கஜப்பிரஷ்ட விமானம்கொண்ட கோவில். பெண்ணாகடம் கோவில் தூங்கானைமாடம் எனப் பட்டது. பல்லவர் காலத்தில் இத்தகைய கோவில்கள் பல கட்டப்பட்டன. அவற்றுள் திருத்தணிகைக் கோவில் ஒன்றாகும். (9) ஈசுவரம் என்பது சிவன் கோவிலின் பொது வான பெயர்.

**இயற்கை வருணனை** :—சமயகுரவர் தாம் சென்ற ஒவ்வோர் ஊரின் இயற்கை அழகையும், செயற்கையழகையும்

இனிதாகப் பாடியுள்ளனர். சம்பந்தரும் சுந்தரரும் இயற்கை அழகில் மிகுதியாகத் தோய்ந்த உள்ளமுடையவர். ஒவ்வொரு தலமும் அவர்கள் காலத்தில் எங்ஙனம் அமைந்திருந்தது என்பதை அவர்தம் பாடல்கள் தெரிவிக்கின்றன. சான்றாகச் சில பாடல் அடிகளைக் கீழே காண்க :

' மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமலம்
மொட்டலரும் திருவை யாறே." —சம்பந்தர் தேவாரம்

" அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடு மணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முகமலருங் கலயநல்லூர் காணே"

" பலங்கள்பல திரையுந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசிலின்தென் கரைமேற்
கயலுகளும் வயல்புடைசூழ் கலயநல்லூர் காணே."
—சுந்தரர் தேவாரம்

இங்ஙனம் உள்ளத்தை ஈர்க்கும் இயற்கை வருணனைகள் பல, இத் திருமுறைகளில் இருக்கின்றன.

**தமிழ்ப் பண்கள் :**—சங்க நூல்களைக்கொண்டு அறிய இயலாத பண்களின் பெயர்கள் பல இத்திருமுறைகளில் இருக்கின்றன. இவை பல்லவர்கால இசைத் தமிழின் சிறப்பை இனிது விளக்குவனவாகும். கொல்லி, இந்தளம், சீகாமரம், குறிஞ்சி, தக்கேசி, நட்டராகம், புறநீர்மை முதலிய பல தமிழ்ப் பண்களின் பெயர்கள் இத் திருமுறைகளில் இடம் பெற்றுள்ளன. தமிழ் இசைச் சங்கத்தார் இப்பண்களை ஆராய்ந்து வருகின்றனர். இம் முயற்சிக்குப் பெரும் தூண்டுகோலாய் உள்ள இராஜா. சர். முத்தைய செட்டியார் அவர்களுக்குத் தமிழகம் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளது.

**விழாக்கள் :**—திருவாரூர், திருமயிலை, திருத்தில்லை முதலிய பல கோவில்களில் ஆதிரை, பூசம் முதலிய நாட்

களில் விழாக்கள் நிகழ்ந்தன. திருவாரூர், தில்லை, திருப்பத்தூர், திருவையாறு முதலிய ஊர்களில் தேர்விழாவும் நடைபெற்றது.

திருமயிலாப்பூர்—கபாலீசுவரர் கோவிலில் பன்னிரண்டு மாதங்களிலும் விழாக்கள் நடந்தன என்று சம்பந்தர் குறித்துள்ளார். பூரட்டாதியில் விழா, ஐப்பசித் திருவோணவிழா, கார்த்திகையில் விளக்கீடு விழா, மார்கழியில் திருவாதிரை விழா, தையில் பூசவிழா, மாசியில் கடலாட்டு விழா, பங்குனியில் உத்திரவிழா, சித்திரையில் அட்டமிநாள் விழா, வைகாசியில் ஊஞ்சலாடும் திருவிழா, ஆனி, ஆடி, ஆவணி என்ற மூன்று திங்களிலும் பெருஞ்சாந்தி விழா (பவித்திர விழா) நடைபெற்றன.

**கோவில்களில் திருமேனிகளும் உருவச்சிலைகளும் :—** கோவில்களில் விழாக்களும் ஊர்வலங்களும் நடைபெற்றன என்பதால் கடவுளர் திருமேனிகள் இருந்தன என்பது பெறப்படும். அப்பர்—சுந்தரர்—சம்பந்தர் தமக்கு முற்பட்ட நாயன்மார்களைத் தங்கள் பதிகங்களிற் பாடியிருத்தலைக்காண நாயன்மார் பிறந்து தொண்டுசெய்து மறைந்த ஊர்க்கோவில்களில் அவர்கள் உருவச்சிலைகள் எழுப்பிப் பூசை செய்யப் பெற்று வந்தன எனக் கோடல் பொருந்தும். இங்ஙனமே தேவாசிரிய மண்டபத்தில் சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடியபொழுது, 50 நாயன்மார்கட்கும் உருவச் சிலைகள் இருந்தன எனக்கருதுதல் பொருத்தமாகும்.

**இசைக்கலை :—** திருவாரூர், திருவீழிமிழலை முதலிய பல ஊர்க் கோவில்களில் பண்ணொடு பாடல்கள் பாடப்பட்டன என்பது திருமுறைகளால் தெரிகிறது. சில சான்றுகளைக் கீழே காண்க :

“ பண்ணியல் பாடல் அறாத ஆரூர் ”

“ பத்திமைப் பாடல் அறாத ஆரூர் ”

“ பரசியல் பாடல் அறாத ஆரூர் ”

“ தையலார் பாட்டு ஓவாச் சாய்க்காடு ”

"மாதர் மைந்தர் இசைபாடும் பூம்புகார்"

இறைவன் "ஏழிசையாய் இசைப்பயனாய்" இருப்பவன்;

"பண் அவனே" "பண்ணின் திறலும் அவனே"

"பண்ணும்பதம் ஏழும்பல ஓசைத்தமிழ் அவையும்
உண்ணின்றதோர் சுவையும்உறு தாளத்தொலி பலவும்
... ... ... ...
விண்ணும் முழுதானானிடம் வீழிம்மிழ லையே!"

என்பது நாயன்மார்கண்ட உண்மை.

நடனக்கலை:—சைவத் திருமுறைகளில் இறைவன் ஆடிய பலவகைக் கூத்துக்கள் இடம்பெற்றுள்ளன. நடன மாதர் பாடல்பெற்ற சிறந்த கோவில்களில் இருந்து நடனக் கலையை வளர்த்து வந்தனர் என்பதைத் திருப்பதிகங்களிற் காணலாம் :

"தேனார் மொழியார் திளைத்தங் காடித் திகழும் குடமூக்கில்"

"வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவை யாறே"

"தண்டு உடுக்கை தாளம் தக்கைசார
நடம் பயில்பவர் உறையும் புகார்"

"சீராலே பாடல் ஆடல் சிதைவில்லதோர்
ஏரார் பூங் கச்சி"

என்பனவும், இவைபோன்று திருப்பதிகங்களில் வருவனவும் அக்கால நடனக்கலை வளர்ச்சியை நன்கு உணர்த்துவன வாகும். கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரரை மணந்துகொண்ட பரவையார் திருவாரூர்க் கோவில் நடன மாதராவர். அவர் ஆடல்—பாடல்களிற் சிறந்து விளங்கினார். நாயன்மார் காலமாகிய பல்லவர் காலத்தில் தில்லைப்பெரு மான் கூத்தப்பெருமான் (நடராசர்) என்று நாயன்மாரால் பாடப்பெற்றான்.

சமய அறிவுரை :—பௌத்தர்—சமணர் நூல்கள் பொய்ந்நூல்கள் ; அவற்றை நம்பாமல் சிவனை வழிபடுங்கள்; தீவினையற்று நன்மையடைவீர்கள் ; எம் திருப்பதிகங்களைப் பாடிப் பயன்பெறுங்கள். திரு ஐந்தெழுத்து நற்பிறவியை

அளிக்கும் ; ஐந்தெழுத்தே நல்ல துணையாகும். ஐந்து இந்திரியங்களையும் அடக்குங்கள்; மனத்தை ஒருவழிப்படுத்தி நினையுங்கள் ; ஓங்காரத்து ஒருவனாகிய சிவனைக் காண்பீர்கள்.

"புலனடக்கமும், மனவொருமைப்பாடும் மிக்க தூயவனிடம் உள்ள மலங்களை இறைவன் அகற்றுவான் ; இறையுணர்வில் உரிய இன்பத்தை அருள்வன். உடம்பாகிய வீட்டில்—உள்ளமாகிய அகலில்—உணர்ச்சியாகிய நெய்யை விட்டு—உயிர் என்னும் திரியிட்டு—அறிவு என்னும் சுடர் ஏற்றிப் பார்த்தால் சிவனுடைய திருவடிகளைக் காணலாம்."

"மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையுள் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையும் அன்றே."

"ஆடுங்கள், அழுங்கள், பாடுங்கள், வழிபடுங்கள்" என்பது நாயன்மார் அறிவுரை. சம்பந்தரது திருக்கோடிகா திருப்பதிகமும், நெஞ்சுக்கு அறிவுறுத்தும் முறையிற் பாடப்பட்ட அப்பரது ஆரூர்த் திருத்தாண்டகமும் மக்கட்கேற்ற சமைய அறிவுரைகளாகக் கொள்ளற்பாலன. கோவில் வழிபாடு, கோவிலில் தொண்டுசெய்தல், தலயாத்திரை, அடியார் கூட்டுறவு, மாகேசுவர பூசை என்பனவும் வற்புறுத்தப் பட்டுள்ளன.

**நன்றியுரை** :—இத்தகைய பல சிறப்புக்களும் பொருந்திய திருமுறைகளை எல்லோரும் வாங்கிப் படித்து இன்புறத் தக்க அடக்கவிலையில் ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு வெளியிட்டு உதவிய சைவ சித்தாந்த மகா சமாஜத்தார்க்கும், அண்மையில் தலவரலாறு—கல்வெட்டுச் செய்திகள் முதலிய பல விளக்கங்களோடு சிறந்த முறையில் வெளியிட்டு உதவிய தருமை ஆதீன மகா சந்நிதானம் அவர்களுக்கும், தமிழகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

—

4

# சமாஜ ஆண்டுவிழா நிகழ்ச்சிகள்

திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார், பி. ஏ., பி. டி.

நமது சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் **54**-ஆம் ஆண்டுவிழாவும், அதனைச் சார்ந்த சைவர் - மங்கையர் - இளைஞர் மாநாடுகளும், 1959 டிசம்பர் 25, 26, 27-ஆம் தேதிகளில் மூன்று நாட்களும், காஞ்சிபுரத்திற்கு அண்மையில் உள்ள வாலாஜாபாத்தில், பெரும்புகழ் பெற்றோங்கிப் பிறங்கும் இந்துமதபாடசாலையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றன. வாலாஜாபாத்திற்குச் சிவபுரம் (சீவரம்) என்பது பழைய பெயர். விழாநாட்களில் அப் பழைய பெயருக்குஏற்ப அவ்விடம் சமாஜ அன்பர்களுக்கெல்லாம் சிவபுரமாகவே விளங்கியது எனலாம். இங்ஙனம், சமாஜ ஆண்டுவிழாவும் மாநாடுகளும் மிக்க சிறப்புடன் நிகழ்தற்குக் காரணர்களாக விளங்கிய அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களையும், இந்துமத பாடசாலைத் தலைவர் - பொருளர் - துணைச் செயலர் என முறையே விளங்கும் திரு. தி. மாணிக்கச் செட்டியார், திரு. வா. து. நடராஜ முதலியார், திரு. அண்ணா. நா. ப. தணிகையரசு ஆகியவர்களையும், இவர்களுக்கெல்லாம் உடனிருந்து உதவிகள் பல புரிந்து சமாஜ விழாவினை வெற்றியுற நடத்திக் கொடுத்த இந்துமத பாடசாலை ஆசிரியர்கள் மாணவர்கள் அனைவரையும், எத்துணை போற்றிப் பாராட்டினாலும் பொருந்தும்.

அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் சமாஜத்தோடு மிகநெடுங் காலமாகத் தொடர்புகொண்டு திகழ்பவர்கள். சமாஜத்தின் தொடக்க கால முதல் சமாஜ ஆண்டு விழாக்களில் இரண்டொன்றைத் தவிர ஏனைய எல்லாவற்றிலும் கலந்துகொண்டு மகிழ்ந்துவரும் மாண்புடையவர்கள். சைவமும் தமிழும் ஆகிய இரண்டையும் தம் இரு கண்களாகப் போற்றி, அவற்றை வளர்க்கும் குறிக்கோள் கொண்டே, " இப் பாடசாலை தென்னாட்டிலுள்ள பாடசாலைகட்கே முன்மாதிரியாக இருக்கிறது என்பது முகமன் அன்று;

உண்மையே!” எனத் திருப்பாதிரிப் புலியூர்ச் சிவத்திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் போன்ற சான்றோர் பெருமக்கள் அனைவரும் போற்றிப் புகழும் வகையில், இந்துமத பாடசாலையை நிறுவித் திறம்பட வளர்த்து வருபவர்கள். இத்தகைய அருமைப் பெரியார் அப்பா. திரு. வா. தி. மா. அவர்கள் முன்னின்று நன்கினிது நடத்திக் கொடுத்தனர் என்றால், சமாஜ விழா நிகழ்ச்சிகளின் சிறப்பு எங்ஙனம் இருந்திருக்கும் எனக் கூறவும் வேண்டுமோ?

சென்னைத் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான் தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சமாஜத்தின் 54-ஆம் ஆண்டு விழா வுக்கும் சைவர் மாநாட்டிற்கும் தலைமை தாங்கினார்கள். சென்னை திருவாட்டி. சௌந்தரம் கைலாசம் அம்மையார் அவர்கள் சைவமங்கையர் மாநாட்டிற்குத் தலைமை ஏற்றார் கள். சைவ இளைஞர் மாநாடு காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு. ந. சஞ்சீவி, எம். ஏ. அவர்களின் தலைமையில் நடைபெற்றது.

இவ்விழாவில் நாற்பதுக்கு மேற்பட்ட சொற்பொழி வாளர்கள் கலந்துகொண்டமையும், அவர்கள் இந்நாளைய நிலைமைகட்கும் தேவைகட்கும் ஏற்ற வெவ்வேறு வகையான புதிய புதிய அரிய தலைப்புகளில் சிறப்புறப் பேசினமையும், அவரவரும் தத்தமக்குக் குறிப்பிடப்பெற்ற 24 நிமிடக் கால வரையறை கடவாமல் வியப்புறப் பேசி மகிழ்வித்தமையும், இத்தனை ஆண்டு விழாக்களில் இல்லாத முறையில் அப் பேச் சுக்கள் அனைத்தையும் தொகுத்து அவரவர் உருவப்படங் களுடன் புத்தக வடிவில் அழகுற அச்சிட்டு வெளியிட்டமை யும் பிறவும், குறிப்பிடத்தக்க சிறப்புச் செய்திகள் ஆகும். மூன்று நாட்களும் காலை மாலையில் நிகழ்ந்த பள்ளிச் சிறுவர் களின் வழிபாட்டுக் கூட்டமும், இளைஞர் மாநாட்டிற் கலந்து கொண்ட இந்துமத பாடசாலையின் பழைய மாணவர்களாகிய அறிஞர்களின் பேச்சுக்களும், பெரிதும் உருக்கமும் உணர்ச்சி யும் மிக்கு அனைவரையும் இன்புறுத்தின.

முதல் நாள் வெள்ளிக்கிழமை யன்று காலை 7 மணிக்குச் சுப்பிரமணியர் ஆலயத்தில் வழிபாடு நடைபெற்றது. அது போது திரு. மா. ப. தியாகராய முதலியார் அவர்கள், பி. ஏ. எழுதிய உரையுடன்கூடிய சமாஜப் பதிப்பு—கந்தர் அநுபூதி—முருகப்பெருமான் பாதமலர்களில் வைத்து வெளியிடப்பட்டது. பின்னர்த் திருமுறைகள் பல்லக்கில் விருதுகளோடு செல்லத், தலைவர்கள் தலைமையில் தேவார பாராயணத்துடன் மாணவர் ஊர்வலம் புறப்பட்டது; அது கடைத்தெருவழியே சென்றபோது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. எட்டு மணியளவில் மாநாடு தொடங்கிற்று. வாலாஜாபாத் ஊராட்சி மன்றம் முதலிய பல அமைப்புகளின் தலைவரும், நெல்லாலை உரிமையாளருமான திரு. வா. து. நடராசன் அவர்கள் கொடியேற்றி வைத்தார். சென்னை, உயர் அறமன்ற மாநடுவர். உயர்திரு. வி. சுப்பிரமணிய நாடார் பி. எ. பி. எல்., அவர்கள், சமாஜ வெளியீடான கந்தர் அநுபூதி நூலை வெளியிட்டார்கள். சென்னை இந்து அறநிலையத்துறை ஆணையாளர். உயர்திரு. அ. உத்தண்டராமன். ஐ.ஏ.எஸ். அவர்கள் சைவர் மாநாட்டைத் திறந்துவைத்தார்கள். சமாஜத் தலைவர் இராவ் சாகிப் திரு. நல். முருகேச முதலியார் பி. ஏ., அவர்கள் ஓர் இனிய முன்னுரை நிகழ்த்தினார்கள். இம்மாநாட்டில் சொற்பொழிவுகள் அனைத்தும் அச்சிட்டுப் புத்தகமாகத் தரப்பட்டன. பிரதி ஒன்றின்விலை மூன்று ரூபா. மாநாட்டில் இரண்டு ரூபாவுக்குத் தரப்பட்டது. சொற்பொழிவுகளின் முழு விவரங்களை அங்குக் காணலாம். சிவத்திரு. வித்துவான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளுடைய தலைமை யுரைக்குப் பின்னர் இராவ்சாகிப் - திரு. டி. ஏ. வி. நாதன், பி.ஏ.,பி.எல்., திரு. அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம்.லிட்., புலவர். திரு. முருகவேள் அவர்கள், எம்.ஏ., எம்.ஓ.எல். ஆகியோர் முறையே "சங்ககாலத்திற்கு முற்பட்ட சைவம்," "சங்ககாலச் சைவம்," "பல்லவர்காலச் சைவம்" என்னும் பொருள்களைப் பற்றிப் பேசினார்கள்.

பிற்பகல் நிகழ்ச்சி 3-30-க்குத் தொடங்கிற்று. திரு. ஜி. கலியாணம் பிள்ளை, எம். ஏ., திரு. பூ. ஆலாலசுந்தரம்

செட்டியார், எம்.ஏ., திரு. ச். சிவகுமாரன், எம்.ஏ.,சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார், பி. ஏ., எல்.டி., டாக்டர். மா. இராசமாணிக்கனுர், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி., ஆகியவர்கள் முறையே, "சோழர்காலச் சைவம்," "பிற்காலச் சைவம்", "இக்காலச் சைவம்", "அறிவியலும் சைவமும்", "சைவம்வளர வழிகள்" என்பன பற்றிப் பேசினுர்கள். இச்சொற்பொழிவுகளுக்குப் பின்னர் வரவேற்புக் குழுவினரால் "பெரிய புராண ஆராய்ச்சி" "சைவ சமய வளர்ச்சி" என்னும் அரிய நூல்களை இயற்றிய டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனுர் அவர்களுக்குப் பொன்னுடை போர்த்துச் "சைவ நெறிக்காவலர்" என்ற பட்டம் வழங்கப்பட்டது. டாக்டர் அவர்களுடைய சைவ சமய சேவையைப் பற்றிப் பல அறிஞர்கள் பேசினுர்கள். இரவு உணவுக்குப் பின்னர் வள்ளலார் இல்ல மாணவச் சிறுவர்கள் பலவகைக் களியாட்டங்களால் அன்பர்களை மகிழ்வித்தனர். திரு. பு. ர. சாமிநாத முதலியார், எம்.ஏ., எல். டி. முதலிய அறிஞர்கள் மாணவச் சிறுவர்களைப் பாராட்டிப் பேசினர். மாணவர்களின் நிகழ்ச்சிகளுள் பாடசாலையின் வளர்ச்சியையும், அதன் எதிர் காலத்தையும் பற்றிய வில்லுப் பாட்டு மிகச் சிறப்புடையதாக விளங்கியது.

இரண்டாம் நாள் வள்ளலார் இல்லத்தில் காலை 7-30 மணிக்கு அம்பலவாணர் திருமுன் வழிபாடு நடைபெற்றது. 8 மணிக்கு மாநாடு தொடங்கிற்று. திரு.திருஞானசம்பந்தம், எம்.ஏ., வித்துவான் திரு. அருணை வடிவேலு முதலியார், திருவாட்டி இராஜரத்தினம் அம்மையார், எம்.ஏ.,எல்.டி., ஆசார்யா திரு. சந்திரகாந்த முதலியார், எம்.ஏ., திரு. தி கி. நாராயணசாமி நாயுடு முதலியோர் முறையே "சைவத்தின் உயிர்நாடிகள்", "அன்றாட வாழ்க்கையில் சைவசித்தாந்தம்" "அருள் நூல்கள் ஓதுதலின் அரும்பயன்", "உபநிடதங்களும் சித்தாந்த சைவமும்", "வைப்புத்தலங்கள்" என்பனபற்றிப் பேசினுர்கள்.

மாலை 3 மணிக்குச் சைவமங்கையர் மாநாடு நடைபெற்றது. திருமதி. நீலாவதி இராமசுப்பிரமணியம் அவர்கள்

மாநாட்டைத் திறந்துவைத்தார்கள். திருமதி. சௌந்தரம் கைலாசம் அம்மையார் அவர்கள் தலைமையுரை நிகழ்த்தினார்கள். திருவாட்டி-ஜெயகுமாரி பாஸ்கரன், திருவாட்டி வா. தாட்சாயணி அம்மையார், பி.ஏ. (சிறப்பு), திருவாட்டி புனிதவதி அம்மையார், திருவாட்டி. வ.பா. தாமரைக்கண்ணி அம்மையார், திருவாட்டி கிருஷ்ண சஞ்சீவி, பி.ஏ.,பி.டி., திருவாட்டி மா. இரா. தமிழரசி, திருவாட்டி. சு. இராஜலட்சுமி, பி.ஏ., (சிறப்பு) ஆகியோர் "சமையல் அறையில் சைவம்", "விருந்தோம்பலில் சைவம்", "பிள்ளை வளர்ப்பில் சைவம்", "மங்கையர் வாழ்வில் சைவம்", "சமய வளர்ச்சியில் மங்கையர் பங்கு'," "பிற சமயங்களில் மங்கையர் பங்கு" என்பன பற்றிப் பேசினார்கள். அன்றுமாலை வழிபாடு, வள்ளலார் இல்லத்தில் அம்பலவாணர் திருமுன் நடைபெற்றது. இரவு "திருநீற்றன்பு" என்னும் மெய்ப்பொருள் நாயனார் சரித நாடகம் வள்ளலார் இல்ல மாணவர்களால் மிகவும் திறம்பட நடிக்கப்பெற்றது.

மூன்றும் நாள் காலைச் சிற்றுண்டிக்குப் பின் சைவ இளைஞர் மாநாட்டை உயர்திரு மணலி. சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி. ஏ. அவர்கள் திறந்துவைத்தார்கள். திரு. ந. சஞ்சீவி அவர்கள் தலைமையுரையை வழங்கினார்கள். இந்தமத பாடசாலையிற் பயின்ற பழைய மாணவர்களான திருவாளர்கள் மணிஅரசு. க. நாராயணசாமி, மு. அண்ணாமலை எம்.ஏ., சுந்தரவடிவேல், பி.எஸ்ஸி., இ. டி. தட்சிணாமூர்த்தி, பி. காம்., தி. செ. பழநிவேல், பி. ஏ., தி. கி. ஆதிமூலம், பி. ஏ., பி.எல்., சி. பத்மநாபன், பி.ஏ., எம். பி.பிஎஸ்., சொ. பரமசிவம், எம்.ஏ. ஆகியோர் முறையே "மாணவ வாழ்க்கையில் சைவம்", "ஆசிரியர் வாழ்வில் சைவம்", "சமுதாய வாழ்வில் சைவம்", "வாணிபத்தில் சைவம்", "அலுவல் துறையில் சைவம்", "சட்டமும் சமயமும்", "மருத்துவத்தில் சைவம்", "சைவத்தில் இளைஞர் பற்றுவைக்க வழிவகைகள்" என்பதுபற்றிப் பேசினார்கள்.

பகல் உணவுக்குப் பின்னர் 1-30-க்கு வள்ளலார் இல்லத்தில் அம்பலவாணர் திருமுன் இராவ்சாகிப் திரு. நல்.

முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள் தலைமையில் சமாஜ உறுப்பினர் பொதுக் கூட்டமும் செயற்குழுக் கூட்டமும் நடைபெற்றன. செயற்குழு முதலியனவற்றிற்குரிய உறுப்பினர் தேர்தல் நடைபெற்றது. சமாஜத்தோடு மிக நெடுங் காலமாகத் தொடர்பு கொண்டிருப்பவரும், சுந்தரர் தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா முதலியவற்றிற்குச் சிறந்த குறிப்புரைகள் எழுதிச் சமாஜச் சார்பில் வெளியிட்டவரும் ஆகிய சைவப் பெரியார் ருக்மணிகுக்கர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. அவர்கள், சமாஜக்கட்டிட நிதிக்காக ரூபாய் 20000 (இருபதாயிரம்) வழங்குவதாக வாக்களித்தார்கள். விவரம் பிறிதோரிடத்தில் காணலாம்.

மாலை 4 மணிக்குப் பொதுக் கூட்டம் தொடங்கியது. திருவாளர்கள்-மாநிலத் தலைமைநடுவர் திரு. ஆர். சதாசிவம், பி.ஏ.,பி.எல்., பி. எச். சுந்தரம், பி.ஏ.,பி.எல்., குடந்தை ப. சுந்தரேசன், சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. முதலியோர் முறையே "சுந்தரர் வழக்கும் சேக்கிழார் வாக்கும்", "அழுதால் உன்னைப் பெறலாமே", "திருமுறைப் பண்கள்", "பொதுமக்களுக்குச் சித்தாந்த உண்மைகள்" என்பன பற்றிப் பேசினார்கள். தவத்திரு. சுவாமிகள் முடிவுரை நிகழ்த்தினார்கள். சொற்பொழிவுகளுக்கு இடையிடையே வள்ளலார் இல்ல மாணவர்களால் திருநெறி உரையாடல்களும், அருட்பாக்கள் ஓதுதலும் சிறப்புற இனிது நிகழ்ந்தன.

மாநாட்டைச் சிறப்புற நடத்தித்தந்த அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களுடைய அன்புத் தொண்டைப் பாராட்டி, அவர்களுக்குத் தருமையாதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் பொன்னாடை யொன்றும், அவர்களது வலக்கைபோன்று இருக்கின்ற அண்ணா. திரு. நா. ப. தணிகையரசு அவர்களது சேவையைப் பாராட்டித் தங்கத்தாலான ஜெபமாலை யொன்றும் அனுப்பி வைத்தார்கள். ஸ்ரீலஸ்ரீ தம்பிரான் சுவாமிகள் அவர்களால் 'அப்பா' அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தப்பட்டது. 'அண்ணா'வுக்கு

ஜெபமாலை வழங்கப்பட்டது. அவ்விரு பெருமக்களுடைய சீரிய தொண்டுகள் பற்றி அறிஞர்கள் பலர் பாராட்டிப் பேசினார்கள்.

சமாஜ விழா இங்ஙனமெல்லாம் நன்கினிது நடைபெறுதற்கு மூல காரணராய் விளங்கி, அரிய பல செயல் முறைகளை வகுத்து நடத்திக்காட்டிய சமாஜச் செயலாளர்-பேரறிஞர் திரு. கி. இராமலிங்கனார், எம்.ஏ. அவர்கள் நன்றியுரை நிகழ்த்தினார்கள். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிகழ்த்திய விரிவான முடிவுரைக்குப் பின்னர்க் கடவுள் வாழ்த்துடன், சமாஜ விழா மிகச் சிறப்பாக இனிது நிறைவேறியது.

"செந்தமிழ்நல் அருமைமொழி செழித்துயர்க! சிவநெறியாம்
நந்தம்அரும் பெருஞ்சமயம் நனிபரவிச் சிறந்தொளிர்க!
இந்துமதப் பள்ளியொடெம் வள்ளலார் இல்லர்எலாம்
சந்ததமும் இறையருளால் தழைத்தோங்கி வளர்கநன்றே!
—முருகவேள்

---

# அன்றாட வாழ்க்கையில் சைவ சித்தாந்தம்

[காஞ்சிபுரம், வித்துவான், தருமை ஆதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி, சி. அருணை வடிவேலு முதலியார்]

சிவநெறி வளர்க்கத் திரண்டுள்ள இப் பேரவைக்குத் தலைமை தாங்கியருளும் எங்கள் அருட்டிரு அடிகளார் அவர்களே, அவைக்கண் குழுமியிருக்கும் பெருமக்களே, உங்கள் அனைவர்க்கும் எனது பணிவார்ந்த வணக்கம்.

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் 54-ஆம் ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டுக் கூடியுள்ள இப் பேரவைக்கண் சொற்பொழிவாற்றுதற்கு, ஒருவர்க்கு ஒரு நாழியாகப் பலர்க்குப் பல நாழிகளை அளந்தளிக்குமிடத்து, எனக்கும் ஒருநாழி அளந்தளித்த சமாசத்தினர்க்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

சமாசத்தினர் எனக்குப் பணித்த பொருள், 'அன்றாட வாழ்க்கையில் சைவ சித்தாந்தம்' என்பது. அதனை அவர்

கள் எத்துணை ஆழ்ந்தும் அகன்றும் அமையக் கருதிப் பணித்தார்கள் என்பதை யான் அறியேன். ஆயினும், எனது அறிவிற்கு அகப்பட்ட அளவிலும், குறித்த காலஎல்லைக்கு ஏற்பவும் அதனை ஒருவாறு மூன்றாகப் பகுத்துக்கொண்டு பேசலாம் என எண்ணுகிறேன். அம்மூன்றாவன: (1) 'அன்றாட வாழ்க்கையில் உள்ளது சைவசித்தாந்தமே', (2) 'அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டு அறியப்படும் உண்மை சைவ சித்தாந்தமே', (3) 'அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டுவது சைவ சித்தாந்தமே' என்பன.

1

அன்றாட வாழ்க்கையில் உள்ளது சைவ சித்தாந்தமே:— சில சமயங்கள் அல்லது மதங்கள், முடிந்த முடிபுகளாகச் சில கருத்துக்களை வெளியிடுகின்றன; அவை நமது அன்றாட வாழ்க்கையில் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. எடுத்துக் காட்டாக ஒன்றைக் குறிப்பிடலாம்:

"காட்சியினாலும், கருத்தினாலும் நம்மால் அறியப்படும் பொருள்கள் பலவாய்த் தோன்றினும், உண்மையில் பொருள்கள் பல இல்லை; ஒன்றே உள்ளது. அஃது அறிவேயாம்; ஆகவே, அவ்வறிவைத் தவிர ஏனைய எல்லாப் பொருள்களும், கயிற்றினிடத்துப் பொய்யாய்த் தோன்றுகின்ற பாம்பைப்போல, அறிவினிடத்துத் தோன்றும் பொய்த் தோற்றமே; அதனால், இவ்வுலகில் நமக்கு உண்டாகும் இன்பத் துன்பங்கள் யாவும் உண்மையில் நிகழ்வன அல்ல; இவற்றை உண்மையென்று நினைக்கின்ற நாமும், அவ்வறிவிற்கு வேறாய்ப் பலவாய் இல்லை; அனைவரும் அந்த அறிவாகிய ஒன்றேயாம்," என்று இவ்வாறு உணர்த்துகின்றது ஒரு மதம்.

இதனை, அம் மதத்தைச் சேர்ந்தவர்தாமே தமது அன்றாட வாழ்க்கையில் இல்லாத ஒன்று என்று ஒப்புக்கொள்வார். எவ்வாறெனில், அவர் பசியாலாயினும், நோயினாலாயினும் வருந்தி, உணவாயினும், மருந்தாயினும் தேடி அலையும்பொழுது, மற்றொருவர் அவரைக் கண்டு, "ஏன்

ஐயா, 'பசி' என்பதும், 'நோய்' என்பதும், அவற்றை அடைகின்றவர்களும், அவற்றிற்கு மாற்றாகிய 'உணவு' என்பதும், 'மருந்து' என்பதும், அவற்றைக் 'கொடுப்பவர்' என்பவரும் ஆகிய எல்லாம் கயிற்றில் அரவுபோலப் பொய்தாமே? கயிற்றில் அரவு படமெடுத்து வந்து சீறிக் கடிக்குமோ? கடித்ததென்றால், அதற்கு மலடி மைந்தராய் உள்ள மருத்துவர் வந்து, ஆகாயத்தில் உண்டாகிய மூலிகையைக் கொடுத்துத் தீர்ப்பதுதானே முறையாகும்?'' என்று கேட்டால், அவருக்கு அடக்க ஒண்ணுச் சினம் உண்டாக, 'பசி முதலியன எல்லாம் பொய் என்பது வேறு, இப்பொழுது என்னைப் பசி வாட்டுகின்றது என்பது வேறு; இரண்டையும் ஒன்று சேர்த்துக் குழப்பாதீர்கள் ஐயா' என்றுதான் சொல்வார். ஆகையால், அவரது மதம் அன்றாட வாழ்க்கையில் அமையவில்லை என்பது வெளிப்படை.

இதுபற்றிச் சைவ சித்தாந்தம் சொல்வது வேறு: 'அறிவு என்பது ஒரு பொருள்; அறியாமை என்பது ஒரு பொருள்; அந்த அறியாமையை அடைந்திருப்பது வேறொரு பொருள்; அறியாமையைத் தேய்க்கும் பொருள்கள் சில; அறியாமையை அடைந்துள்ள பொருள், அறியாமையைத் தேய்க்கும் பொருள்களால் அறியாமை தேயப் பெற்று அறிவை அடையும்; அறியாமை உள்ள துணையும் இன்பம் துன்பம் மயக்கம் என்பன நிகழும்; அறிவை அடைந்தபின்பு இன்பம் ஒன்றே நிலைத்து நிற்கும்; ஆகவே, அறிவு அறியாமை முதலிய பொருள்களும், இன்பத் துன்ப மயக்கங்களும் யாவும் உண்மையே; ஒன்றேனும் பொய்யன்று; ஆயினும், அறியாமையோடு கூடிநின்று சிறிது இன்பத்தோடு, பெரிய துன்பத்தையும் மயக்கத்தையும் அடையும் நிலை இழிந்தது; அறிவைப் பெற்றுப் பேரா இன்பப் பெருவாழ்வை அடைந்திருக்கும் நிலை உயர்ந்தது.' இதுவே, சைவசித்தாந்தம் சொல்வது. இது அன்றாட வாழ்க்கையில் அமைந்திருத்தல் அனைவர்க்கும் புலனாவதே.

இப்படியே வேறு பல மதங்கள் கூறுவனவற்றையும், அவை நமது அன்றாட வாழ்க்கையில் சிறிதும் இல்லாதொழி

தலையும், அவைபற்றிச் சைவ சித்தாந்தம் கூறும் உண்மைகளையும், அவை அன்றாட வாழ்க்கையில் இனிது அமைந்து கிடத்தலையும் காட்டிக்கொண்டே போகலாம் ; நேரம் கொள்ளும். இதனால் முடிவாக நாம் உணர வேண்டுவது, 'சைவ சித்தாந்தம் நமது அன்றாட வாழ்க்கையில் அமைந்துள்ள ஓர் இயற்கை நெறியே' என்பது.

## 2

அடுத்து, 'அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டு அறியப்படும் உண்மை சைவ சித்தாந்தமே' என்பதை எடுத்துக்கொள்வோம்.

உலகில் உள்ள பொருள்கள் இருவகையினவாகக் காணப்படுகின்றன : ஒன்று உயிர்ப் பொருள் ; மற்றொன்று உயிரல்லாத பொருள். 'உயிர்' என்று கூறுமிடத்து அனைவர்க்கும் கருத்து, 'உடம்பிடமாக நிகழும் அறிவு' என்பதே. அவ்வறிவாய் உள்ளது எது ? என்னும் வினாவிற்குப் பொருத்தமான விடைகாண எழுந்தனவே எல்லா மதங்களும். எனவே, இவ்வினாவிற்குரிய தக்க விடையைத் தெரிந்து கொள்ளுதலே உண்மையாகச் சமயத்தினை அறிய விரும்பும் ஒவ்வொருவர்க்கும் முதன்மையான செயலாகும்.

'உயிராவது யாது ?' என்று ஆராயப் புகுந்தபொழுது பற்பல மதங்கள் பற்பல மாறுபட்ட முடிபுகளைக் கூறியுள்ளன. அவை அனைத்தையும் மூன்றாக அடக்கலாம். அவை : (1) 'உயிர்' என்பது ஓர் உண்மைப்பொருள் அன்று, உள்ளதுபோலத் தோன்றுவதொரு சூனியப் பொருளே' என்பதும், (சூனியம் என்பதற்கு 'உருவெளித் தோற்றம் போலத் தோன்றுவதாய், உண்மையில் இல்லாததாய் இருப்பது' என்பது கருத்து.) (2) 'உடம்பின் பகுதிகளுள் ஒன்றோ பலவோ அல்லது முழுதுமோதான் உயிர்' என்பதும், (3) 'உடம்பு உயிரன்று ; பரம்பொருள்தான் உயிர்' என்பதும் ஆகும். ஆராய்ச்சியில் துணிய முடியாமை பற்றி, 'உயிர் சூனியப் பொருள்,' என்றும், உயிரெனப்படும் அறிவு உடம்பிற்கு வேறாய்த் தோன்றாமைபற்றி, 'உடம்பே

உயிர்' என்றும், உடம்பு அறிவில் பொருளால் அழிதல் பற்றியும், ஆன்மா அறிவாய் அறியாததாய் உள்ளது என நூல்கள் கூறுதல் பற்றியும், 'பரம்பொருளே உயிர்' என்றும் அவ்வம் மதங்கள் கூறுவனவாயின.

சைவ சித்தாந்தம் உயிரைப் பற்றிப் பின்வருமாறு கூறும் :—'சூனியப் பொருளால் பயன் ஒன்றும் விளைதல் இலாதாகையாலும், உயிரால் பல பயன்கள் விளையக் காண்கின்றேம் ஆகையாலும், உயிர் சூனியப் பொருளன்று. உடம்பு அறிவில் பொருளாகலானும், அறிவும் அறியாமையும் ஒன்றுக்கொன்று மறுதலைப் பொருள்கள் ஆகையாலும், அறிவில் பொருளாகிய உடம்பிற்றானே அறிவும் உண்டாகும் என்பது பொருந்தாது; அவ்வாறு கூறுதல், 'இருளிலிருந்தே ஒளி தோன்றும்' என்பதுபோலாகும். ஆகவே, உடம்பு உயிரன்று. பரம்பொருள் அறிவே வடிவமானது ஆகையாலும், அதற்கு அறிவிற்கு மறுதலையாகிய அறியாமையும் உண்டென்றல் கூடாதாகையாலும், அவ்வாறு கூறுதல் ஒளியினிடத்தே இருளும் உண்டென்று கூறுதல்போலும் ஆகையாலும், உயிர் அறிவாய் நிற்றலோடு, அறியாமையும் உடைத்தாய்க் காணப்படுவதாலும் பரம்பொருள் உயிரன்று. 'மற்று எதுதான் உயிர்?' எனின், உயிர், அறிவில் பொருளாகிய உடம்பு முதலியவற்றினும், அறிவேயாய பரம்பொருளினும் வேறாய் உள்ள ஒரு தனிப்பொருள். அஃது ஒளியும் அல்லாது, இருளும் அல்லாது இரண்டினோடும் சேரக் கூடியதாய் உள்ள கண்போன்றதாகும்.'

இவ் வுண்மையினை நமது அன்றாட வாழ்க்கையைக் கொண்டே உணருமாறு உணர்த்துகின்றது சைவசித்தாந்தம். அதனையும் சிறிது காண்போம் :

உயிர் சூனியப் பொருளே எனின், 'இஃது உயிரன்று; இஃது உயிரன்று' என்று எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்து தள்ளி, முடிவில், 'உயிர் என்பது சூனியமே' என்று முடிவு செய்தது எது? அஃது ஓர் அறிவுதானே? அந்த அறிவைச் 'சூனியம்' என்றும், 'சூனியமாய் உள்ள அதுவே இத்துணை ஆராய்ச்சியையும் செய்தது' என்றும்

கூறின், அது, 'உருவெளி மாத்திரமாய்த் தோன்றிய காதலன் ஒருவனால் காதலி ஒருத்தி மிகுந்த இன்பம் எய்தி மகிழ்ந்தாள்' என்பதுபோலாகும். ஆதலின், அவ்வறிவே உள்பொருளாகிய உயிராகும்' என்கின்றது சைவசித்தாந்தம்.

"அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய் நின்றொன் றுளது அதுவே நீ" என்பது சிவஞானபோதம்.

எல்லாவற்றையும் ஆராயும் அறிவாகிய உயிர் சூனியம் அன்று; உள்பொருளே. அது, வேறு காணப்படுமாறின்றி, உடம்பிற்றானே காணப்படுதலால், உடம்பின் பகுதிகளில் ஒன்றையோ பலவற்றையோ அல்லது எல்லாவற்றையுமோ உயிர் என்றல் பொருந்தும் எனின், நன்கு ஆராய்ந்தால் அதுவும் பொருந்துமாறில்லை.

கண் முதலிய ஐம்பொறிகளை நோக்குவோம்: 'இஃது ஓர் உருவம் காணப்படுகின்றது' என்ற ஓர் அறிவு ஒருவனுக்கு உண்டாகின்றது. அவ்வறிவு அவனது கண்ணிடத்தில் நிகழ்வதாகவே கொண்டால், 'இஃது ஓர் ஓசை கேட்கப்படுகின்றது' என்றாற்போல உண்டாகும் ஒவ்வோர் அறிவும் அந்த அந்தப் பொறிகளிடத்தில் நிகழ்கின்றன என்றே கொள்ளவேண்டிவரும். அவ்வாறு கொண்டால், ஐந்து அறிவும் ஐந்து உயிராய், ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதனவாய்ப்போகும். ஆனால், நமது அன்றாட நிகழ்ச்சியில், அழகான ஒரு பொருளைக் கண்டு களித்த அறிவிற்கே, அதனைத் தீண்டி இன்புற வேண்டும் என்னும் அவா உண்டாதலையும், அவ்வாறே தீண்டி இன்புறுதலையும் காண்கின்றோம். ஆகவே, ஐந்தறிவும் ஒரு பொருளிடத்தே நிகழ்கின்றன என்பதும், அந்த ஒருபொருளிடத்து அவை நிகழ்தற்கு ஐம்பொறிகளும் வாயில்களாம் அவ்வளவே யன்றிப் பிறிதில்லை என்பதும் நன்கு விளங்கும். இதனால் ஐம்பொறிகளையும் வாயில்களாகக்கொண்டு அறியும் உயிர் அவ்வைம் பொறிகளுக்கு வேறாய் உள்ளது என்பது தெளிவாகும்.

வெளிக் கருவிகளாகிய ஐம்பொறிகளைவிட உட்கருவியாகிய மனம் நுட்பமுடையதாகையால், அதனையே அறிவாகிய உயிர் என்று மயங்குதல்கூடும். உட்கருவியால்

நிகழும் அறிவும் ஒருவகையாய் இராமல், ஐயம், எழுச்சி, துணிவு, நுகர்ச்சி எனப் பல்வேறு வகையாய் இருத்தலால், வெளியில் ஒளி முதலிய ஐந்தையும் அறிதற்கு ஐந்து கருவிகள் வேண்டியிருத்தல்போல, ஐயம் முதலிய பல அறிவு நிகழ்ச்சிக்கும் பல கருவிகள் வேண்டும். அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்காம். அவையும் மேற்கூறிய முறையால் உயிருக்குக் கருவிகளாகுமேயன்றி உயிர் ஆவன அல்ல. இவ்வாறே உடம்பின் எப்பகுதியும் உயிருக்குக் கருவியேயாம்.

இதனால், பொருள்களை நேரே காணமாட்டாத குறைபாடுடைய கண்ணிற்கு, இடைநின்று அவற்றைக் காணச் செய்யும் கண்ணாடிபோல, யாதொன்றையும் நேரே யறிய மாட்டாத குறைபாடுடைய அறிவாகிய உயிருக்கு, இடைநின்று அவற்றை அறியச்செய்யும் வாயில்களே உடம்பினுள் உள்ள பகுதிகள்யாவும் என்பது புலனாகும்.

'உடம்பின்கண் உள்ள பகுதிகளுள் ஒவ்வொன்றையோ சிலவற்றையோ உயிரென்னாது, எல்லாம் சேர்ந்த தொகுதியை உயிர் என்றல் பொருந்தும்' என்பதையும், மேற்காட்டிய முறைகளால் நன்கு நுனித்து ஆராயின், அவை அனைத்தும் கூடி, 'உடம்பு' எனப்பட்டு, கண்ணுக்குக் கண்ணாடிபோல உயிருக்குக் கருவியாயே நிற்றல் விளங்கும், அதனால், 'எவ்வாற்றானும் உடம்பு உயிரன்று; உயிர் அதனின் வேறாய் உள்ளது' எனத் தெளிவுபடுத்தும் சைவ சித்தாந்தம்.

"கலையாதி மண்ணந்தங் காணில், அவை மாயை ;
நிலையாவாம், தீபமே போல ;—அலையாமல்
ஞானத்தை முன்உணர்ந்து நாடில், அதுதனுவாம்
தான்அத்தின் வேறாகும் தான்"

என்பது சிவஞானபோதம். (தொடரும்)

---

நிறுவியவர் நாள் விழா : நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலையில், அதனை நிறுவிய பெரியார் உயர்திரு. நி. பழநியப்பரின் 89-ஆம் பிறந்த நாள் விழா 5–1–60 அன்று மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. (வேறு இடங்களின் விழாச் செய்திகள் அடுத்த இதழில் வெளிவரும்.)

# 1960-ஆம் ஆண்டின் சமாஜப் பணியாளர்கள்

வாலாஜாபாத்தில் 26-12-1959-ல் இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ., அவர்கள் தலைமையில் நடைபெற்ற சமாஜக் காரியக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்ற சமாஜப் பணியாளர்கள்.

[ஒவ்வொருவர் பெயர் முன்னும் 'திருவாளர்' என்றும், பின் 'அவர்கள்' என்றும் சேர்த்துப் படிக்கவும்.]

தலைவர் : அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. ; உதவித் தலைவர்கள் : நல். முருகேச முதலியார், பி. ஏ. ; ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. ; செயலாளர் : கீ. இராமலிங்க முதலியார், எம். ஏ. ; துணைச் செயலாளர் : ஜி. கலியாணம் பிள்ளை, எம்.ஏ. ; பொருட் காப்பாளர் : எம். பி. தியாகராஜ முதலியார், பி. ஏ. ; பத்திராசிரியர் : புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல். ; உதவிப் பத்திராசிரியர் மு. நாராயணசாமி முதலியார் ; மாதக் கணக்குப் பரிசோதகர் : எஸ். சிவராமன் ; ஆண்டுக் கணக்குப் பரிசோதகர் : டி. எஸ். கோபால கிருஷ்ணன் ; செயற்குழுவினர் : சி. என். சிங்காரவேலு முதலியார், எம்.ஏ., வி. ஆறுமுக முதலியார், அம்பை சங்கரனார், என். டி. கிருஷ்ணசாமி, பி.ஏ., பி.டி , ச. நடேச முதலியார், ஜி. வடிவேலாயுதம், எம்.ஏ., பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம். ஏ., சி. வி. கிருஷ்ணமூர்த்தி, ச. சிவகுமார், எம்.ஏ., டி. வேங்கடாசல முதலியார், ஆர். குழந்தைவேல் நாயகர், இலட்சுமி அம்மாள்.

பணியாளர் கழகம் :—க. வச்சிரவேலு முதலியார், பி. ஏ., எல். டி., முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், தி. கி. நாராயணசாமி நாயுடு, பி. ஆர். சுவாமிநாதன், எம். ஏ., எல். டி., வா. தி. மாசிலாமணி முதலியார், மஞ்சக் கொல்லை சம்பந்தமூர்த்தி முதலியார், எஸ். நடராஜ நாடார், பி. ஏ , பி. எல். பிஎல். டி. எல். தேனப்ப செட்டியார், அருணைவடிவேல் முதலியார்,

பத்திராசிரியர் கழகம் :—டாக்டர். எம். இராசமாணிக்கனார், எம். ஏ., எல். டி., எம். ஓ. எல்., பிஎச். டி., தி. கி. நாராயணசாமி நாயுடு, என். டி. கிருஷ்ணசாமி, பி. ஏ., பி. டி., சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார், பி. ஏ., பி. எல்., மு. நாராயணசாமி முதலியார், கீ. இராமலிங்க முதலியார், எம். ஏ., அ. கு. காமாட்சி அம்மையார், எம்.ஏ., ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., டாக்டர் வ. ஆ. தேவசேனபதி, எம்.ஏ., பிஎச்.டி., வட்டுக் கோட்டை நாகலிங்கம், முத்து - சு. மாணிக்கவாசக முதலியார், க. வெள்ளை வாரணனார்.

ஆராய்ச்சிக் கழகம்:—சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், ஆ. சிவலிங்கனார், சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார், திருஞான சம்பந்தம், எம்.ஏ., எல். டி., சந்திரகாந்த சாஸ்திரியார், எம், ஏ.

மாவட்ட ஆலோசனைச் சபையினர் :—தஞ்சாவூர் : மு. அருணாசலம் பிள்ளை, எம். ஏ., ரா. ம. சம்பந்தமூர்த்தி முதலியார், மஞ்சக்கொல்லை ; கனகசபைப் பிள்ளை, திருக்கடவூர் ; திருச்சிராப்பள்ளி : அரிமளம் ஆர். எம். ஏ. என். அண்ணாமலை செட்டியார், ஜி. வரதராஜ பிள்ளை, திருவள்ளுவர் நிலயம், புத்தூர்; அரிமளம் பு. எம். ஆர். செல்லப்ப செட்டியார் ; குமரி : ஜி. வள்ளிநாயகம் பிள்ளை, ஆறுமுக நாவலர், நாகர்கோயில் ; திருநெல்வேலி : மறை. திருநாவுக்கரசு, கணபதி ஆலை, எஸ், எஸ். அருணாசலம் பிள்ளை, தென் காசி திருவள்ளுவர் கழகம், தெ. கணபதியப்பன் ; இராமநாதபுரம் : சேவு. மெய்யப்ப செட்டியார், காரைக்குடி ; முத்துப்பட்டணம். - சொ. நாராயணஞ் செட்டியார், ஆத்தங்குடி - சி. டி. எம். என். நாராயணன் செட்டியார், மதுரை : பழனி - க. அரங்கசாமி முதலியார், வி. வி. சி. ஆர். முருகேச முதலியார், ஔவை - துரைசாமி பிள்ளை; வட ஆர்க்காடு : புரிசை - முருகேச முதலியார், ஆறுமுகம், எம். ஏ., பி. டி., வேலூர் - பாலசுப்பிரமணிய முதலியார், வி. எஸ். கணபதி முதலியார் ; கோவை : சிவகிரி - கே. பி. ஆர். சுப்பராயன், எஸ். மீனாட்சிசுந்தர முதலியார், சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் ; சேலம் : கே. சிங்காரவேல் செட்டியார், அ. கு. காமாட்சி அம்மையார், போத்தனூர் வேலூர் - ஆர். எம். மாணிக்கம் பிள்ளை ; தென் ஆர்க்காடு : பொன்னம்பலம் பிள்ளை, தி. கி. நாராயணசாமி நாயுடு, கே. எம். பெரியதம்பி, எம். தண்டபாணி முதலியார் ; செங்கல்பட்டு : வா. து. நடேச முதலியார், சி. காளப்ப முதலியார் ; ஜெ. கு. வரதராஜ முதலியார், திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார் ; புதுவை : சேனாபதி முதலியார் ; காரைக்கால் : தி. சோ. தட்சிணாமூர்த்தி முதலியார், கே. எஸ். எஸ். நடேசமுதலியார் ; கொழும்பு : சர். கந்தையா வைத்யநாதன், சு. நடேசப் பிள்ளை, அருள் தியாகராசா, டி. எஸ். சோமசுந்தரம் ; யாழ்ப்பாணம் : வ. நாகலிங்கம், ஏ. அருளம்பலம், முத்துத்தம்பி, அம்பிகைபாகன், கே. பாலகிருஷ்ணன் ; மலாய் நாடு : கே. இராமநாதன் செட்டியார், சிவநேயன், கோவிந்தசாமிப் பிள்ளை, அ. மு. பெரியசாமிப் பிள்ளை, பழனிவேல் பிள்ளை, ஆர். வி. கந்தையா.

---

சமாஜச் செயற்குழுக் கூட்டம் :—இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் 24-1-60-ல் கூடியது. சமாஜக் கட்டிடம், நன்கொடை யளித்தவர்கட்கு நன்றி பாராட்டல், அடியவர் திருநட்சத்திர விழாக் கொண்டாடல், திரு. ச. சோமசுந்தர பாரதியார் - திரு. சதாசிவ பண்டாரத்தார் இவர்களின் மறைவுக்கு அனுதாபம் முதலியவைபற்றித் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# செய்திகள்

திருமணம் : சமாஜச் செயற்குழு உறுப்பினரும், சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும் ஆகிய திரு. பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார், எம்.எ. அவர்களின் அருமைப் புதல்வி செல்வி புனிதவதிக்கும், திரு. எம். கந்தசாமி செட்டியார் புதல்வர் திரு. எம். கே. அண்ணாமலை, பி.எ., அவர்களுக்கும், சென்னை தங்கசாலைத் தெருவில் 10-2-60 அன்று சிறப்புறத் திருமணம் நிகழ்ந்தது. மணமக்கள் நீடினிது வாழச் சமாஜம் வாழ்த்துகின்றது.

ஆன்ற தமிழறிஞர் அன்புருவாம் நற்சைவர்
தோன்றலுயர் ஆலால சுந்தரனார்—ஈன்றெடுத்த
செல்வி புனிதவதி, சீரார் அண்ணாமலைதாம்
நல்வகையில் வாழ்க ! நயந்து. —முருகவேள்

ஆண்டு விழா : கிழக்குத் தாம்பரம் ஸ்ரீ கற்பக விநாயகர் பக்தஜன சபையின் இரண்டாவது ஆண்டு விழா, 9-1-60 அன்று மாலை, முன்னாள் 'கவர்னர்' திரு. கே. சந்தானம் அவர்கள் தலைமையில் நடந்தது. சபைத் தலைவர் திரு. ஆத்மலிங்க ஐயர் வரவேற்புரை கூறினார். செயலாளர் திரு. சி. பி. பத்மநாபன், எம்.ஏ. ஆண்டறிக்கை படித்தார். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் "மார்கழி நீராடல்" பற்றிப் பேசினார். சபையின் துணைத்தலைவர் திரு. ஜி. வடிவேலாயுதம், எம்.ஏ. அவர்கள் இனியதொரு நன்றியுரை கூறினார்.

---

# சமாஜ நிகழ்ச்சிகள்

சமாஜம் அடியார் திருநட்சத்திர விழாக்களைச் சென்னையில் பல இடங்களில் நடத்துவதெனத் தீர்மானித்தபடி இதுவரை கீழ்க் காணுமாறு நடைபெற்றது :—

**19-1-60 :** இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம். ஏ. அவர்கள் தலைமையில், திரு. புலவர் - முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல் அவர்கள் 'சண்டேசுரர்' என்பது பற்றியும், திருவாட்டி எஸ். இராஜலட்சுமி, பி. ஏ. (ஹானர்ஸ்) அவர்கள் 'திலகவதியார்' என்பது பற்றியும் பேசினார்கள்.

**23-1-60 :** இராயப்பேட்டை சுந்தரேசுவரர் கோயிலில் திரு. C. N. சிங்காரவேல்முதலியார், எம். ஏ. அவர்கள் தலைமையில் வித்துவான் திரு. அம்பை - சங்கரனார், திரு. T. R. சாரங்கபாணி, எம். ஏ. இவர்கள் முறையே 'திருநீலகண்டர்', 'தாயுமானார்' என்னும் பொருள்கள்பற்றிப் பேசினார்கள்.

**30-1-60 :** பூக்கடை - சென்ன மல்லேசுவரர் கோயிலில் திரு. நல். முருகேச முதலியார், பி. ஏ. அவர்கள் தலைமையில், திரு. கயப்பாக்கம் - சோமசுந்தரஞ் செட்டியார், திரு. G. கலியாணம்,

எம். ஏ. இவர்கள் முறையே 'கலிக்கம்பர்', 'அப்பூதியடிகள்' என்பனபற்றிச் சொற்பொழிவு செய்தார்கள்.

**8-2-60:** திருமயிலைக் கபாலீசுவரர் கோயிலில் திரு. V. ஆறுமுக முதலியார் அவர்கள் தலைமையில், வித்துவான் திரு. T. பிச்சைப் பிள்ளை, திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார் இவர்கள் முறையே 'கண்ணப்பர்', 'அரிவாட்டாயர்' என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் அடியார் திருநட்சத்திர விழா கொண்டாடுவதற்கென அறுபது ரூபாய் நன்கொடை அளித்தார்கள். மேயர் கம்பெனி திரு. R. மாசிலாமணி முதலியார் அவர்கள் சொற்பொழிவாளர்களுக்கு மாலைகள் போடுவதற்குப் பதில் கைத்தறித் துண்டுகளைப் போடுமாறு வழங்கினார்கள். இவ்விரு பெரியார்களுக்கும், கூட்டங்களை நடத்த இடந்தந்த தருமகர்த்தர்கள், நிர்வாக அதிகாரிகள், மற்றப் பொறுப்பாளர்களுக்கும் சமாஜம் தனது நன்றியைச் செலுத்துகிறது.

## இனி நடைபெற இருப்பவை

16-2-60 எறிபத்த நாயனார்—இராயபுரம் சிவசுப்பிரமணியர் கோயில்.
23-2-60 காரிநாயனார், கோச்செங்கட் சோழநாயனார்—பள்ளியப்பன் தெரு, அருணாசலேசுவரர் கோயில்.
12-3-60 திருவள்ளுவநாயனார்—மயிலாப்பூர்த் திருவள்ளுவர்கோயில்

சென்னையிலும் அதைச் சுற்றியுமுள்ள அங்கத்தினர்கள் இதையே அழைப்பாகப் பாவித்து மேற்கண்ட இடங்களில் நடைபெறும் அடியார் திருநட்சத்திர விழாக்களுக்குத் தவறாது வருமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றார்கள்.—சீ. இராமலிங்கம், எம். ஏ., ஜி. கலியாணம், எம். ஏ., சமாஜச் செயலர்கள்.

## பிரிவாற்றாமை

சைவத்துக்கும் தமிழுக்கும் பெருந் தொண்டு புரிந்த நாவலர் - கணக்காயர் டாக்டர் சோமசுந்தர பாரதியார், கல்வெட்டாராய்ச்சிப் பேரறிஞர் - டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் ஆகிய இவ்விரு பெரியார்களின் மறைவுக்காகச் சமாஜம் அதனுடைய ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறது. அன்னார்களின் ஆன்மா சாந்தியடைவதாக.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.